*Nam nāṭu*

*Malar 4, itaḻ 176*

*January 02, 1957*

Record no. 1131

REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 4] சென்னை: மார்கழி 19உ புதன் (2—1—57) ★ ★ வெளியீடு: மார்கழி 20உ வியாழன் (3—1—57) [இதழ் 176

## ஒவ்வொரு பெண்ணும் நெசவு அறிவராம்

ஆஜ்மீர், ஜன. 1—

தனக்கு நெசவு தெரியுமுன் தான் ஒரு கணவனைத் தேடிக்கொள்ள அருகதையற்றவள் என்றே அசாமில் உள்ள ஒவ்வொரு பெண்ணும் கருதுவராம்.

இத்தகவலை, தனது மனைவிக்குங்கூட நெசவு தெரியும் என்று கூறி, அசாம் மாநில முதன் மந்திரி விஷ்ணுராம் மேத்தி வெளியிட்டிருக்கிறார்.

# கழகம் போட்டியிடாத இடங்களில் யாரை ஆதரிப்பது?

## முடிவு செய்யப் பொதுச்செயலாளருக்கு அதிகாரம்

## ஏழு பேரடங்கிய தேர்வுக்குழு நியமனம்

### மறைந்த வீரர்களுக்கு அனுதாபம்

### தி. மு. கழகப் பொதுக்குழு முடிவுகள்

30—12—56 ஞாயிறன்று சேலத்தில் நடைபெற்ற பொதுக் குழுக் கூட்டத்தில் ஒரே மனதாக நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள்:—

#### 1. அனுதாபம்

(அ) திராவிட முன்னேற்றக் கழக முன்னணிச் செயல் வீரரும், பொதுக் குழு உறுப்பினரும், மத்திய செயற்குழு உறுப்பினரும், நெல்லை மாவட்டத் திராவிட முன்னேற்றக் கழகச் செயலாளரும், தூத்துக்குடி நகர மன்ற உறுப்பினரும், வி. வி. டி. பள்ளியின் நிருவாகியும், பல்வேறு தொழிற் சங்கங்களின் தலைவரும் ஆன தோழர் கே. வி. கே. சாமி அவர்கள் படுகொலைக்கு ஆளாகிய துயரச் செய்தி கேட்டு, அவரது இழப்பு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பு என்று கருதி மிகவும் வருந்துவதோடு அவரைப் பிரிந்து வாடும் அவரது குடும்பத்தினருக்கும், உற்றார் உறவினர், நண்பர்கள் ஆகியோருக்கும் இப்பொதுக் குழு தன் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறது.

(ஆ) தமிழர்கள் வாழும் மாநிலத்திற்குத் 'தமிழ் நாடு' என்று பெயரிட வேண்டும் என்று வற்புறுத்தி உண்ணா நோன்பு இருந்து உயிர் நீத்த விருதை மறத்தமிழர் சங்கரலிங்கனார் அவர்களும், இந்தியத் துணைக் கண்ட அரசியல்—பொருளாதாரப் பேரறிஞருள் ஒருவரும், தாழ்த்தப்பட்ட மக்களின் ஒரு பெருந்தலைவரும், சமுதாயச் சீர்திருத்தப் பகுத்தறிவு வாதியும் ஆன டாக்டர் அம்பேத்கார் அவர்களும், இசைப் பெரும் புலவரும், தமிழகத்திற்கே தனிச் சிறப்பு அளித்துக்கொண்டிருக்கும் நாதசுர இசையுலகில் தனிப்பெரும் மன்னராய் விளங்கியவரும் ஆன திருவாவடுதுறை இராசரத்தினம் அவர்களும் மறைந்தது குறித்து இப்பொதுக் குழு மிக வருந்துவதோடு, அன்னார்களுடைய குடும்பத்தினருக்கும், உற்றார் உறவினர் நண்பர்களுக்கும் தன் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறது.

(இ) அரசியலாரின் அலட்சியப் போக்கின் காரணமாக அரியலூருக்கு அருகில் தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் வண்டி விபத்திற்குள்ளாகி நூற்றுக்கணக்கானவர்கள் மடிய நேரிட்டதைக் கண்டு இப்பொதுக் குழு மனங்கலங்கி கருந்துவதுடன், அப்படி மடிந்தவர்களைப் பிரிந்து வருந்தும் அவர்களது குடும்பத்தினருக்கும், உற்றார் உறவினர் நண்பர்களுக்கும் இப்பொதுக் குழு தன் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறது.

—தலைவர்

#### 2. ஒழுங்கு நடவடிக்கை

கழகத்தின் கடமையையும் கண்ணியத்தையும் மறந்து, கழகக் கட்டுப்பாட்டை மீறி, கழகத்தின் சார்பாகப் பொதுச் செயலாளர் விதித்த விதி முறைகளைப் புறக்கணித்துக் கழகத்திற்கு இழுக்கு நேரிடும் வகையில் நடந்துகொண்ட சென்னை மாவட்டத்தைச் சார்ந்த தோழர்களான ஆர். டி. அரசு, இளம்பரிதி, புரட்சிமணி ஆகியோர் மீதும், சென்னை 43-வது வட்டக் கிளையின்மீதும் பொதுச் செயலாளர் முறைப்படி எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளை ஏற்றுக்கொள்வதோடு, தோழர்கள் இளம்பரிதி, புரட்சிமணி ஆகிய இருவரையும் திராவிட முன்னேற்றக் கழகச் சாதாரண உறுப்பினர் பதவியிலிருந்தும் அறவே நீக்கிவைப்பது என்றும் இப்பொதுக் குழு ஒரே மனதாகத் தீர்மானிக்கிறது.

—முன்மொழிபவர்: ஈ. வெ. கி. சம்பத்

—வழி மொழிபவர்: காஞ்சி - கல்யாணசுந்தரம்

(4-ம் பக்கம் பார்க்க)

# காமராசருக்கு எதிராக காங்கிரஸ் தியாகி போட்டி

## காங்கிரசை வீழ்த்த இதர கட்சிகளுக்கு ஆதரவு

### தியாகிகள் கமிட்டி முடிவு

சென்னை, சன. 2—

முதன் மந்திரி காமராசருக்கு எதிராகக் காங்கிரஸ் தியாகிகளுள் ஒருவர் வரும் தேர்தலில் போட்டியிடுவார் என்று தெரியவருகிறது.

அரசியல் தியாகிகள் சங்கத் துணைக் குழு இந்த முடிவை மேற்கொண்டிருக்கிறது.

#### 15 இடங்களில்

தியாகிகள் சென்னை சட்டசபைக்கு—திருநெல்வேலி, இராமநாதபுரம், மதுரை, செங்கல்பட்டு, சென்னை மாவட்டங்களிலிருந்து 15 இடங்களுக்குப் போட்டியிடுவர் என்றும் முடிவாகி இருக்கிறதாம்.

#### இதர கட்சிகளுக்கு ஆதரவு

காங்கிரசல்லாத இதர கட்சிகளுக்கு ஒரு தொகுதியில் வெற்றிக்கான வாய்ப்பு இருக்குமானால், அங்கு தியாகிகள் போட்டியிடுவதில்லை என்றும், மாறாக காங்கிரசுக்கு எதிரான அந்தக் கட்சியினருக்கு தங்கள் ஆதரவை அளித்து காங்கிரசை முறியடிப்பது என்றும் தியாகிகள் முடிவெடுத்திருக்கின்றனராம்.

## 'காங்கிரஸ்' என்ற பெயர் கசக்கிறது!

### மந்திய மந்திரிகளுக்குக் கருப்புக் கொடி நித்திய நிகழ்ச்சியாகிவிட்டது

அகமதாபாத், ஜன. 1—

தாலத் எனும் இடத்தில் காங்கிரஸ் ஊழியர்கள் மற்றும் விவசாயிகள் கூட்டம் ஒன்றில் பேசிவிட்டுத் திரும்பிய மத்திய மந்திரி ஜி. எல். நந்தாவின் காரை மடக்கிக்கொண்டு, மகா குஜராத் மொழி வழி மாநிலம் கோரும் ஆர்ப்பாட்டக்காரர்கள் கோஷங்கள் எழுப்பியிருக்கிறார்கள்.

மந்திரியைப் பாதுகாப்புடன் அழைத்துச் செல்ல வந்த போலீஸ் கார்மீது ஆர்ப்பாட்டக்காரர்களில் சிலர் கல்லெறிந்ததாகவும், அதனால் காரின் கண்ணாடிக் கதவு ஒன்று உடைந்ததாகவும், சபர்கந்தா மாவட்ட மன்றத் தலைவரான கோபால்தாஸ் படேல் என்ற எம். எல். ஏ.-வுக்கு உதடு துண்டிக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது.

#### தடியடி

ஆனந்த், ஜன. 1—

மகா குஜராத் ஆர்ப்பாட்டக்காரர்கள், இங்கு நடைபெறும் குஜராத் இளைஞர் காங்கிரஸ் மாநாட்டின் மீது கல்லெறியில் ஈடுபட்டார்கள் என்று கூறி, அவர்கள்மீது போலீசார் தடியடிப் பிரயோகம் செய்தனராம்.

#### மின்சார 'சப்ளை' துண்டிப்பு

ஆர்ப்பாட்டக்காரர்கள் மின்சார 'சப்ளை'யைத் துண்டித்துவிட்டதினால், இந்த நகரம் முழுவதும் சுற்றியுள்ள கிராமங்கள் மூன்று மணி நேரத்திற்குமேல் இருளில் மூழ்கியிருக்க நேர்ந்தது என்றும் கூறப்படுகிறது.

#### கருப்புக் கொடி

மாநாட்டிற்கு வெளியே ஆர்ப்பாட்டக்காரர்கள் கருப்புக் கொடிகளுடன் தொடர்ந்து கோஷமிட்டு வருவதாயும், சுவரொட்டிகளை ஒட்டி போலீசார் ஒன்பது பேர்களைக் கைது செய்திருப்பதாகவும் கூறப்படுகிறது.

இந்தியாவில் தற்போது ஆண்டொன்றுக்கு ரூ. 65 கோடி பெறுமானமுள்ள பத்திரிகை-காகிதம் செலவழிக்கப்படுவதாகத் தெரிகிறது.

## காங்கிரஸ் கோட்டைக்குள் குத்து வெட்டு

### அதிகாரபூர்வமான காங்கிரஸ் அபேட்சகரை எதிர்த்து 'உண்மை காங்கிரசார்' போட்டியிடுவர்

#### அநீதி, கொடுங்கோன்மை, சர்வாதிகாரம் இவற்றையே எதிர்க்கிறார்களாம்

காங்கிரஸ் கட்சிக்குள் குத்தும் வெட்டும், வெகுஜோராக ஆரம்பமாகியிருக்கின்றன.

வரப்போகும் தேர்தலில், அதிகாரபூர்வமான காங்கிரஸ் அபேட்சகர்களை எதிர்த்துப் போட்டியிடுவது என்று சுமார் 1,000 காங்கிரஸ் ஊழியர்கள், இங்கு நடைபெற்ற மாநாடு ஒன்றில் முடிவு செய்திருக்கிறார்களாம்.

இந்த ஊழியர்கள் அனைவரும் தீர்ஹத், பகல்பூர், பாட்னா பிரிவுகளைச் சேர்ந்த 12 மாவட்டங்களிலிருந்தும் வந்தவர்களாம்.

#### உண்மைக் காங்கிரசார்

மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய ராம்பினோத் சிங் என்ற எம். எல். ஏ., 'கொடுங்கோன்மை, அநீதி, இலஞ்சக் கொடுமை, சர்வாதிகாரம இவற்றை எதிர்க்கிற காந்திய இலட்சியங்களிலும் ஜனநாயகத்திலும் நம்பிக்கை கொண்ட உண்மையான காங்கிரசாரின் குரல்தான் இந்தத் தீர்மானம்' என்று விளக்கமளித்திருக்கிறாராம்!

#### இப்போதே வீழ்த்தவேண்டும்

"தேர்தல்வரைகூடக் காத்திருக்கக்கூடாது; இப்போதே — சட்டசபையில் வரவு-செலவுத் திட்டம் விவாதத்திற்கு வரும்போதே இப்போதுள்ள காங்கிரஸ் ஆட்சியை வீழ்த்த முயற்சிகள் மேற்கொள்ளவேண்டும்" என்று, மாநாட்டில் பேசிய மாவட்ட மன்றத் தலைவர் ஒருவர் கூறினாராம்!

#### மக்களே தேர்ந்தெடுக்க வேண்டும்

பீகார் மக்கள்மீது ஒரு சர்வாதிகார ஆட்சியைத் திணிக்கச் சதி செய்யும் இப்போதைய காங்கிரஸ் ஆளும் கோஷ்டிக்கு எதிராக, அந்தந்தத் தொகுதிகளில் நல்ல அபேட்சகர்களை நிறுத்துவதற்கு, மக்களே—குறிப்பாகக் காங்கிரசார் உள்ளிட்ட விழிப்புற்ற மக்களே அபேட்சகர்களை தேர்ந்தெடுக்கவேண்டும் என்றும் மாநாட்டில் முடிவாகியதாம்!

## அரசாங்க ஊழியர்களுக்கு புதிய சம்பள விகிதம்

### மைசூர் முதலமைச்சர் தகவல்

பெங்களூர், சன. 1—

மைசூர் அரசாங்கம் இன்று தனது ஊழியர்களுக்குப் புதிய சம்பள விகிதத்தை அறிவித்துள்ளது.

இதன்மூலம் 90 சதவிகித அரசாங்கப் பதிவில்லா ஊழியர்கள் பயனடைவார்கள் என்று முதலமைச்சர் நிஜலிங்கப்பா அறிவித்துள்ளார்.

மாநில அரசாங்க ஊழியர் எவருக்குமே மாதம் ரூ 50-க்குக் குறையாமல் சம்பளம் கிடைக்குமாம்.

இந்தப் புதிய திட்டத்தினால் அரசாங்கத்திற்கு ரூ. 3,93,00,000 அதிகம் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது.

## என். ஜி. ஓ.-க்களுக்கு பொங்கல் முன்பணம்

சென்னை, சன. 1—

சென்னை மாநிலத்தைச் சேர்ந்த கெசட் பதவில்லாத சர்க்கார் ஊழியர்கள் இந்த ஆண்டில் பொங்கல் பண்டிகையை முன்னிட்டு தங்களுடைய பிப்ரவரி மாதச் சம்பளத்தை முன்பணமாகப் பெற்றுக்கொள்ளக்கூடுமாம்.

இதுபற்றி தெளிவான உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதாக நிதி அமைச்சர் கூறியுள்ளாராம்.

சர்க்கார் நடத்தும் இயந்திரத் தொழில் நிறுவனங்களைச் சேர்ந்த சிப்பந்திகளுக்கும் இந்த உத்தரவு பொருந்தக்கூடுமாம்.

Best copy available.

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 2—1—'57 புதன்

# தேர்தலும்—ஆட்சி மொழி சட்டமும்!

"தமிழ்த்தாய்க்கு முடிசூட்டும் திருவிழா, இந்நாள். சென்னை நிருவாக இயந்திரத்தைத் தமிழில் நடத்த அரசாங்கம் உறுதிகொண்டிருக்கிறது. அதற்கான நடவடிக்கைகளை அரசாங்கம் துரிதமாக மேற்கொண்டு இருக்கிறது. அரியாசனத்தில் தமிழ்த்தாய் அமரும் இந்நாள் தமிழ்நாட்டின் சரித்திரத்தில் முக்கியமான நாள்; பொன்னாள்."

இவ்வாறு மகிழ்ச்சி ததும்பக் கூறி, தமிழ் ஆட்சி மொழி மசோதாவை சட்டசபையில் சட்டமாக்கியுள்ளார் நிதி அமைச்சர் சுப்பிரமணியம்.

அவர் பூரிப்புடன் கூறியுள்ள மேற்குறித்த சொற்கள், வெறும் அலங்காரச் சொற்களா அல்லது உடனடியாகச் செயலாற்றப்பட இருக்கின்ற செயல் முறையை விளக்கிக் காட்டும் சொற்களா என்பது ஆராயத்தக்கது. அதற்கு ஆராய்ச்சிக்குக் கிடைக்கும் விடையைக் கொண்டுதான், இந்த நெருக்கடியான தேர்தல் நேரத்திற்கும் தமிழை ஆட்சி மொழியாக்க சட்டமியற்றப்பட்டதற்கும் இருக்கக்கூடிய தொடர்பை சரியாக நிர்ணயிப்பது சாத்தியமாகும்.

சட்டப்படி தமிழ் ஆட்சி மொழியாக்கப்பட்ட பிறகும் கூட, அரசாங்க நிர்வாக இயந்திரம் முழுவதிலும் தமிழ் மொழி கோலோச்சப் போவது கிடையாது. அத்தகு பெருநிலையைத் தமிழ் என்றைக்குப் பெற இருக்கிறது என்பதற்கான காலவரையறையும் புதிய சட்டத்தில் இடம் பெற்றிருக்கவில்லை.

மாவட்ட, அரசாங்க நிர்வாக அலுவலகங்களிலும், அதற்குரிய இடத்தை நமது தாய் மொழி பெறப்போவது கிடையாது. அதற்கான நாளும் திட்டவட்டமாகக் குறிக்கப்பட்டிருக்கவில்லை புதிய சட்டத்தில்.

தாலுகா அலுவலகங்களில் மட்டுமே தமிழ் மொழி ஆட்சி மொழியாக இருந்துவரும் என்று புதிய சட்டம் குறிப்பிட்டிருக்கிறது.

இந்தநிலை இப்பொழுதும் தமிழுக்கு இருந்துதான் வருகிறது. தாலுகா அரசாங்க அலுவலகங்களுக்கும் கிராம அலுவலகங்களுக்கும் நிகழ்ந்து வரும் கடிதப்போக்குவரத்துகள் இன்றும் தமிழ்மொழியில் தான் நடைபெற்று வருகிறது.

எனவே புதிய ஆட்சிமொழி சட்டத்தின் மூலம், தமிழ் மொழிக்குப் புதிதாக எந்தவித உரிமையும் ஏற்பட்டுவிடவில்லை என்பது விளக்கம். ஆனால் ஏற்கனவே தமிழ்மொழி அனுபவித்த உரிமைக்கு சட்ட முத்திரை பொறிக்கப்படுகிறது என்பதுதான் உண்மையாகும்.

தமிழ் ஆட்சிமொழி சட்டத்தின் மூலம் உடனடியாகச் செயல்படக் கூடிய இம்மிகழிகச் சாதாரணமான சிறுபகுதியை வைத்துக் கொண்டு தான், நிதி அமைச்சர் பூரித்துப் போகிறார்—ஏதோ செயற்கரிய செயலைத் தம்வாழ்நாளில் செய்து முடித்து விட்டவர் போல், தமிழ் மக்களின் பாராட்டுதலுக்குக் காத்து நிற்கிறார்.

தமிழ் மொழியை, குமரி முதல் சென்னை வரையில் உள்ள அரசாங்க நிருவாக இயந்திரத்தின் பிரிவுகள் அனைத்திலும் உடனடியாகச் செயல்படுத்த முடியாது இருப்பதற்கு, அதற்கு இன்றியமையாத் தேவையாக உள்ள துவக்க ஏற்பாடுகளைச் செய்யவேண்டி இருக்கிறது என்று நிதி அமைச்சர் சமாதானம் கூறுகிறார்.

அமைச்சர்களின் இந்தச் சமாதானம் ஏற்கக்கூடியதாகவும் இருக்கலாம்; ஏற்கக்கூடாததாகவும் இருக்கலாம். ஆனால், தமிழை ஆட்சி மொழியாக்கும் சட்டம் இயற்றப்பட்டதும், அதை அரசாங்க அலுவலகங்கள் அனைத்திலும் உடனடியாகச் செயல்படுத்துவதற்கான துவக்க ஏற்பாடுகளை ஏற்கனவே செய்து முடிக்காததிலும், செய்யாது வேண்டுமென்றே அலட்சியமாக இருந்துவந்ததிலும் அடங்கி இருக்கும் பொறுப்பை, நிதி அமைச்சர் தனித்தோ அல்லது அமைச்சரவை முழுதுமோ ஏற்றுத்தான் ஆகவேண்டும். அதை ஏற்க மறுப்பதில் நியாயம் துளியும் கிடையாது.

தமிழ் மொழியை ஆட்சி மொழியாக்க வேண்டும் என்பதை ஒரு மூலக் கோட்பாடாக ஏற்கனவே நிதிஅமைச்சர் கொண்டிருப்பவராக இருந்திருப்பாரானால், தாம் அமைச்சராகப் பதவி ஏற்றது முதற்கொண்டே, தமிழ் ஆட்சி மொழியாவதற்குரிய துவக்க ஏற்பாடுகளைச் செய்பணியில் முன்கூட்டியே அவர் ஈடுபாடு உடையவராக இருந்திருக்க வேண்டும். ஆனால் அமைச்சரோ, சட்டமியற்றி விட்ட பிறகு, அதை உடனடியாகச் செயல்படுத்த முடியாமைக்கு சமாதானம் கூறுபவராகக் காணப்படுகிறார். இதிலிருந்தே, தமிழை ஆட்சிமொழியாக்குவதில் அமைச்சருக்கு இயல்பாகக் கருத்து கிடையாது என்பது தெளிவாகத் தெரிகிறது.

தமிழை, ஆட்சி மொழியாக்குவதில் தனித்த முறையில் நிதி அமைச்சருக்குக் கருத்து இருந்தாலும் இல்லாமற்போனாலும், இன்றைக்குச் சரியாக எட்டு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே திருச்சி மாவட்ட அலுவலகத்தில் பரீட்சார்த்தமாகத் தமிழ் ஆட்சி மொழியாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறதே என்பதை எண்ணியாவது, தமிழ்மொழியை உடனடியாகச் செயலாற்றுவதற்குத் தேவைப்படும் துவக்க ஏற்பாடுகளைச் செய்வதில் நிதி அமைச்சர் ஏற்கனவே ஈடுபட முனைந்திருக்க வேண்டும். அந்த வகையிலும் நிதி அமைச்சர் இதுவரை கருத்தற்றவராகவே இருந்து வந்திருக்கிறார் என்பது, இப்பொழுது அவரே பேசும் பேச்சிலிருந்து விளக்கமாகிறது.

தமிழை ஆட்சிமொழியாக்க வேண்டும் என்று ஏற்கனவே சட்ட சபையில் பேச்சு எடுத்தபோது எல்லாம், அதை எதிர்க்கும் போக்கிலேயே நிதி அமைச்சர் நடந்துவந்து இருக்கிறார். அப்பொழுதெல்லாம் அவர் கூறிவந்த சமாதானம், மலையாள மொழியினரும் கன்னட மொழியினரும் சென்னையில் இணைந்திருக்கிறார்கள் என்பதேயாகும். அதுவும் ஒரு பொருந்தா சமாதானம் என்பதை அரசியல் சட்டவிதி சுட்டிக் காட்டுகிறது.

அரசாங்க அலுவலகங்கள் அனைத்திற்கும் அல்லது குறிப்பிட்ட சிலவற்றிற்கு, குறிப்பிட்ட மாகாணத்தில் வழக்கிலிருக்கும் ஒரு மொழி அல்லது ஒன்றுக்குமேற்பட்ட மொழிகளைப் பயன்படுத்த 345-வது விதிப்படி சட்டமியற்ற வழி செய்யலாம் என இந்திய அரசியல் சட்டம் விதித்திருக்கிறது. மேற்படி விதியில், குறிப்பிட்ட மாகாணத்தில் வழக்கில் இல்லாத இந்தி மொழிக்குக்கூட சலுகை அளிக்கப்பட்டிருக்கிறது.

இந்த விதியின்படி, மலையாளிகளும் கன்னடர்களும் இணைந்திருந்த சென்னை மாகாணத்தில்கூட, குறிப்பிட்ட அரசாங்க அலுவலகங்களில் மட்டுமே தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும் என இப்பொழுது இயற்றப்பட்டுள்ள தமிழ் ஆட்சிமொழி சட்டம் போன்ற ஒன்றை, அப்பொழுதே நிதி அமைச்சர் விரும்பி இருந்தால் இயற்றியிருக்க முடியும். நிதி அமைச்சரும், அவரை அமைச்சராகக் கொண்டுள்ள 'பச்சைத் தமிழர்' காமராசர் அமைச்சரவையும், கன்னடியர்களும் மலையாளிகளும் இணைந்திருப்பதைப் புகலாகக் கூறி, தமிழ் ஆட்சி மொழியாவதை அப்பொழுதெல்லாம் வேண்டுமென்றே தடுத்து வந்துள்ளனர்.

அதுவுமன்றி, மொழியை அடிப்படையாகக் கொண்டு சென்னை மாகாணம் பிரிக்கப்பட்டால்தான், அரசாங்க அலுவலகங்கள் சிலவற்றில் தமிழை ஆட்சி மொழியாகப் பயன்படுத்த முடியும் என்ற தடையெதுவும் இருந்து வரவில்லை என்பதையும், மேற்படி அரசியல் சட்டவிதி தெளிவாகத் தெரிவிக்கிறது.

எனவே, மொழி அடிப்படையில் சென்னை மாகாணம் உருவானதின் பலனாகத்தான், இன்று ஆக்கப்பட்டுள்ளது போல், தமிழ் ஆட்சி மொழியாக்கப்படுவது சாத்தியமாயிற்று என்ற வாதமும், உண்மை நிலையை உணர்த்துவதாக இல்லை என்பதும் பெறப்படுகிறது.

அதுமட்டுமல்லாமல், நிதி அமைச்சர் எண்ணுவதுபோல் பல மொழி மாகாண அமைப்பு அல்லது தட்சிணப் பிரதேச ஏற்பாட்டில்கூட, தமிழ் மொழியை அரசாங்க மொழிகளில் ஒன்றாக சட்டப்படி ஏற்றுக்கொள்ளுவது சாத்தியமே என்ற உண்மையும், மேற்படி அரசியல் சட்ட விதி மூலம் விளக்கமாகிறது.

எனவே, அரசாங்கத்தின் குறிப்பிட்ட ஒரு மட்டத்தில் மட்டுமே தமிழ் மொழியை ஆட்சி மொழியாக்க, நெருக்கடியான இந்தத் தேர்தல் நேரத்தைத் தேர்ந்தெடுத்தது, முதல்தரமான தேர்தல் தந்திரமதான் என்பது உறுதியாகிறது. இந்த உண்மையை முழுமூச்சாக நிதி அமைச்சர் மறைத்துப் பேசின போதிலும், இதிலுள்ள 'தேர்தல் சாகசத்தை' அவரால் மறைத்துவிட முடியாது.

பொதுத் தேர்தல்:

## தொகுதி நிர்ணயக் குழு முடிவுகள்

### மாநிலப் புது அமைப்பிற்குப்பின் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் விளக்கம்

புதுடில்லி, டிச. 31—

வருகிற பொதுத் தேர்தலுக்காக மக்கள் சபைக்கும் மாகாண சட்டசபைகளுக்கும் தொகுதிகளை நிர்ணயம் செய்து, இது சம்பந்தமான உத்தரவுகளின் நகல்களை மத்திய, மாகாண அரசாங்கங்களுக்கு தொகுதி நிர்ணயக் குழு அனுப்பியிருக்கிறது.

இன்னும் இரண்டு மாத காலத்தில் நாட்டில் நடைபெறவிருக்கிற பொதுத் தேர்தலில் மக்கள் சபைக்கு 500 பிரதிநிதிகளும், மாகாண சட்டசபைகளுக்கு 3,102 உறுப்பினர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

மாகாணங்கள் புனரமைப்பின் விளைவாகப் பாராளுமன்ற, சட்டசபைத் தொகுதிகளைப் புதிதாக நிர்ணயிக்க வேண்டியிருந்தது. 1956-ம் ஆண்டு பாராளுமன்ற, சட்டசபைத் தொகுதிகள் நிர்ணய உத்தரவை தொகுதிகள் நிர்ணயக் குழு பிறப்பித்திருக்கிறது.

மக்கள்சபைத் தொகுதிகள்

மாகாணவாரியாக மக்கள்சபைக்குள்ள இடங்களின் விவரம் வருமாறு:—

| | |
|---|---|
| ஆந்திரா | 43 |
| அசாம் | 12 |
| பீகார் | 53 |
| பம்பாய் | 66 |
| கேரளா | 18 |
| மத்தியப் பிரதேசம் | 36 |
| சென்னை | 41 |
| மைசூர் | 26 |
| ஒரிசா | 20 |
| பஞ்சாப் | 22 |
| இராசஸ்தான் | 22 |
| உத்திரப் பிரதேசம் | 86 |
| மேற்கு வங்காளம் | 36 |
| சம்மு-காஷ்மீர் | 6 |
| டில்லி | 5 |
| இமாசலப் பிரதேசம் | 4 |
| மணிப்பூர் | 2 |
| திரிபுரா | 2 |
| | 500 |

மக்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட இருக்கிற 500 உறுப்பினர்களில் 76 பேர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்; 31 பேர்கள் மலைவாழ் வகுப்பினர்.

தற்போது மக்கள் சபையில் இந்த வகுப்பினர்களில் முறையே 72 பேர்களும் 26 பேர்களும் இருக்கின்றனர்.

மக்கள் சபைத் தேர்தலுக்கு மொத்தம் 403 தொகுதிகள் இருக்கின்றன; இவைகளில் 92 இரட்டை உறுப்பினர் தொகுதிகள்; 312 ஒற்றை உறுப்பினர் தொகுதிகள். ஒற்றை உறுப்பினர் தொகுதிகள் 16 மலைவாழ் வகுப்பினர்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கின்றன.

சட்டசபைகளுக்கு

மாகாணப் புனரமைப்புக்குப் பின் ஏற்பட்டுள்ள எல்லா மாகாணங்களிலும் 3,102 உறுப்பினர்கள் இருப்பார்கள்.

மாகாணப் புனரமைப்புக்கு முன்பு கேரளம் தவிர 3,125 உறுப்பினர்கள் இருந்தார்கள்.

13 மாகாண சட்டசபைகளிலும் உள்ள 3,102 மொத்த இடங்களில் 470 தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகளுக்காக ஒதுக்கப்படும். ஆனால் மலைவாழ் வகுப்பினருக்கு ஒதுக்கப்படுகிற இடங்கள் 195-லிருந்து 210 ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது.

சட்டசபைகளுக்கு மொத்தம் 2,518 தொகுதிகள் உள்ளன; இவைகளில் 1934 ஒற்றை உறுப்பினர் தொகுதிகளும் 584 இரட்டை உறுப்பினர் தொகுதிகளும் உள்ளன; 104 இடங்கள் மலைவாழ் வகுப்பினர்களின் பிரதிநிதிகளுக்கு ஒதுக்கப்பட்டுள்ளன.

நாடு முழுவதிலும், மூன்று உறுப்பினர் தொகுதிகள் மூன்றே உள்ளன; இவைகள் மூன்றும் மேற்கு வங்காளத்தில் இருக்கின்றன.

மாகாணப் புனரமைப்புக்குப் பின்பு ஏற்பட்டுள்ள மாகாணச் சட்டசபைகளின் உறுப்பினர்கள் 1957 பிப்ரவரி-மார்ச்சில நடக்கவிருக்கிற தேர்தலுக்குப் பின்பு, தொகுதிகள் ஒதுக்கப்பட்ட பொறுத்தவரையில இருக்கக்கூடிய நிலை பற்றிய விவரம் வருமாறு:—

சென்னை

சட்டசபையில் தற்போதுள்ள 189 இடங்களுக்குப் பதிலாக எதிர்காலத்தில் 205 இடங்கள் இருக்கும். தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகளுக்காக ஒதுக்கப்பட்டுள்ள இடங்கள் 39-லிருந்து 37-ஆகக் குறைக்கப்பட்டிருக்கிறது. சேலம் மாவட்டத்தில ஏகாட் பகுதியில் மலைவாழ் வகுப்பினருக்காக ஒரு இடம் சட்டசபையில் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

கேரளம்

தற்போது கேரள மாகாணத்தில் சட்டசபை எதுவும் கிடையாது. கேரளச் சட்டசபையில் 126 உறுப்பினர்கள் இருப்பார்கள்.

ஆந்திரப் பிரதேசம்

மொத்த இடங்கள்—301; தற்போதுள்ள இடங்கள் 297.

மைசூர்

தற்போது சட்டசபையில் உள்ள 209 உறுப்பினர்களுக்குப் பதிலாக 108 போகவே இனி இருப்பார்கள். ஆனால் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ள இடங்களில் எந்தவிதமான மாற்றமும் இல்லை. மலைவாழ் வகுப்பினருக்கு ஒதுக்கியுள்ள இடங்கள் மட்டும் மூன்றிலிருந்து ஒன்றாகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

காற்றின் அளவைக் கண்டுபிடிக்க

## ரேடியோ சாதனம்!

புதுடில்லி, டிச. 31—

காற்று மண்டலத்தில், உயர் மட்டங்களில் உள்ள மேல் காற்றுகள் பற்றிய தகவல்களைச் சேகரிப்பதற்காக நாட்டிலுள்ள பத்து முக்கிய வானிலை ஆராய்ச்சிக் கூடங்களில், காற்றின் அளவுகளைக் கண்டுபிடிப்பதற்கான ரேடியோ சாதனங்கள் இப்போது பொருத்தப்பட்டிருக்கின்றனவாம்.

இதுவரை கண்ணாடிகள் மூலமாகவும் வானமண்டலம் மேகங்களால் சூழப்பட்ட காலத்திலும், உயர்மட்டங்களில் காற்றுகளின் போக்குபற்றி சேகரிக்கப்பட்டுவந்த தகவல்களைக் காட்டிலும் துல்லியமான தகவல்களை சேகரிப்பதற்கும் காலநிலை பற்றிய உத்தேச அறிக்கைகளை—முக்கியமாக உயர் மட்டங்களில் பறந்துசெல்லும் விமானங்களுக்குத் தேவையான அறிக்கைகளை மேலும் திட்டவட்டமான ரீதியில வெளியிடுவதற்கும் இவை பெரிதும் உதவியாயிருக்குமாம்.

இந்த சாதனங்கள் தற்போது சென்னை, புதுடில்லி, கல்கத்தா, பம்பாய், நாகபுரி, அலகாபாத், கௌஹாத்தி, ஜோத்பூர், போர்ட் பிளேர் (அந்தமான் தீவுகள்), திருவனந்தபுரம் ஆகியவிடங்களில் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவாம்.



# தமிழ் நாட்டில் பொதுத் தேர்தல்கள்

## தொகுதிகள் பற்றிய விளக்கம்

நடைபெறப்போகும் பொதுத் தேர்தலில் சென்னை சட்ட சபைக்கு மொத்தம் 205 எம். எல். ஏ-க்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இவர்களில் 6 பேர் சென்னையுடன் இணையப்போகும் தென் திருவாங்கூர் பிரதிநிதிகள்; 37 பேர் பின்தங்கிய வகுப்பினரின் பிரதிநிதிகள்.

மக்கள் சபைக்கு சென்னை மாநிலம் 41 உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும்; இவர்களில் ஒருவர் நம்முடன் சேர்ந்துள்ள தென் திருவாங்கூர் பிரதிநிதியாக இருப்பார்.

சென்னை சட்ட சபையின் ஒவ்வொரு தொகுதிக்கும் சராசரி $1\frac{1}{2}$ இலட்சம் வாக்காளர்கள் இருப்பார்கள்; பார்லிமெண்டரி தொகுதி ஒவ்வொன்றும் இதைப்போல ஐந்து பங்கு வாக்காளர்கள் இருப்பர்.

சென்னை மேல்சபையில் 48 உறுப்பினர்கள் இருப்பர்; இவர்களில் 16 பேர் சட்ட சபையால் தேர்ந்தெடுக்கப்படுகிறவர்கள் 16 பேர் உள்ளாட்சிக் கழகங்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறவர்கள்; 4 பேர் பட்டதாரிகளின் பிரதிநிதிகள்; மற்றும் 4 பேர் ஆசிரியர்களின் பிரதிநிதிகள்; பாக்கி எட்டு பேர்களை கவர்னர் நியமனம் செய்வார்.

### சென்னை நகர

பாராளுமன்றத் தொகுதிகள்

தொகுதி எல்லை நிர்ணயக் குழு உத்தரவு நகலின்படி, சென்னை நகரம், வட சென்னை, தென் சென்னை என்று இரு பாராளுமன்றத் தொகுதிகளாகப் பிரிக்கப்படும்.

வட சென்னையில், கீழ்க்காணும் பகுதிகள் அடங்கும்:—

புதுவண்ணாரப்பேட்டை, சிங்காரத் தோட்டம், இராயபுரம், சஞ்சீவிராயன்பேட்டை, கொருக்குபேட்டை, வியாசர்பாடி, பேசின் பிரிட்ஜ், பெத்துநாய்க்கன் பேட்டை, ஏழுகிணறு, அம்மன் கோயில், முத்தியாலுப் பேட்டை, துறைமுகம், கச்சாலீசுவரர் அக்கிரகாரம், கொத்தவால்சாவடி, சௌகார் பேட்டை, தண்ணீர்த் தொட்டி (டிரெவிலியன் பேசின்), சூளை, புளியந்தோப்பு, பெரம்பூர் பாரக்ஸ், அயன்புரம், புரசைவாக்கம், குயப்பேட்டை, இடைப்பாளையம், போர்ட் செயிண்ட் ஜார்ஜ் ஆகிய பகுதிகளைக்கொண்டது.

தென் சென்னையில் கீழ்க்காணும் பகுதிகள் அடங்கும்:—

கீழ்ப்பாக்கம், வேப்பேரி, பெரியமெட்டு, பார்க்டவுன், கேப்பியர் பார்க், சிந்தாதிரிப்பேட்டை, எழும்பூர், கோயளீசுவரன் பேட்டை, ஆயிரம் விளக்கு, நுங்கம்பாக்கம், கோடம்பாக்கம், தியாகராயநகர், இராயப்பேட்டை, புதுப்பாக்கம், திருவட்டீசுவரன்பேட்டை, சேப்பாக்கம், திருவல்லிக்கேணி, ஜாம்பஜார், மீர்சாகிப் பேட்டை, மைலாப்பூர், தேனாம்பேட்டை, சைதாப்பேட்டை, கிண்டி, அடையாறு ஆகிய பகுதிகளைக் கொண்டது.

### சென்னை நகர சட்டசபை தொகுதிகள்

சட்டசபையில் சென்னைக்குப் பத்து இடங்கள் உண்டு; தொகுதிகள் வருமாறு:—

1. வண்ணை (ஒரு உறுப்பினர்): புதுவண்ணை, இராயபுரம், சிங்காரத்தோட்டம், சஞ்சீவிராயன் பேட்டை.
2. துறைமுகம் (ஒரு உறுப்பினர்): ஏழுகிணறு, அம்மன்கோவில், முத்தியாலுப்பேட்டை, கச்சாலீசுவரர் அகிரகாரம், துறைமுகம், கொத்தவால்சாவடி, சௌகார் பேட்டை, செயிண்ட் ஜார்ஜ் கோட்டை.
3. பேசின் பிரிட்ஜ் (ஒரு உறுப்பினர்): கொருக்குப்பேட்டை, பேசின் பிரிட்ஜ், பெத்துநாயக்கன் பேட்டை, தண்ணீர்த் தொட்டி (டிரெவிலியன் பேசின்), எடப்பாளையம்.
4. பெரம்பூர் (இரு உறுப்பினர்): வியாசர்பாடி, சூளை, புளியந்தோப்பு, பெரம்பூர் பாரக்ஸ், செம்பியம், அயன்புரம், புரசைவாக்கம், குயப்பேட்டை.
5. ஆயிரம்விளக்கு (ஒரு உறுப்பினர்): கீழ்ப்பாக்கம், ஆயிரம் விளக்கு நுங்கம்பாக்கம், இராயப்பேட்டை, புதுப்பாக்கம்.
6. எழும்பூர் (ஒரு உறுப்பினர்): வேப்பேரி, பெரியமெட்டு, பார்க்டவுன், கேப்பியர் பார்க், சிந்தாதிரிப்பேட்டை, கோயளீசுவரன் பேட்டை, எழும்பூர்.
7. திருவல்லிக்கேணி (ஒரு உறுப்பினர்): திருவட்டீசுவரன் பேட்டை, சேப்பாக்கம், திருவல்லிக்கேணி, ஜாம்பஜார், மீர்சாகிப்பேட்டை.
8. மைலாப்பூர் (ஒரு உறுப்பினர்): வடக்கு மயிலாப்பூர், தெற்கு மயிலாப்பூர், தேனாம்பேட்டை, அடையாறு.
9. தியாகராய நகர் (ஒரு உறுப்பினர்): கோடம்பாக்கம், வடதியாகராய நகர், தென்தியாகராயநகர், சைதாப்பேட்டை, கிண்டி.

## விஞ்ஞானம் வளர்ந்து வாழும் நாட்டில்!

பண்ணைகளில் குதிரை-கோவேறுக் கழுதைகள் சேவை!

அமெரிக்கப் பண்ணைகளில், தற்பொழுதுள்ள குதிரைகள், கோவேறு கழுதைகள் ஆகியவற்றின் எண்ணிக்கையைவிட டிராக்டர்களின் எண்ணிக்கை அதிகமாம்.

1954-ல் பண்ணைகளில் வேலை செய்த குதிரைகள், கோவேறு கழுதைகளின் எண்ணிக்கை 41,00,000 ஆகவும், டிராக்டர்களின் எண்ணிக்கை 47,00,000 ஆகவும் இருந்தது.

கடந்த 1920-ல்தான் அமெரிக்காவிலுள்ள பண்ணைகளில் மிக அதிகமான அளவு—2,52,00,000 குதிரைகள், கோவேறு கழுதைகள் இருந்தனவாம்!

பிம்பிரியில் உள்ள பெனிசிலின் தொழிற்சாலையில், 'ஸ்ட்ரெப்டோமைசின்' மருந்து உற்பத்தி சாதனம் அமைக்கப்பட்ட பின்னர், இத்தொழிற்சாலையில் ஆண்டு ஒன்றுக்கு மொத்தம் 15,000 கிலோ கிராமிலிருந்து 20,000 கிலோ கிராமவரையில் 'ஸ்ட்ரெப்டோமைசின்' மருந்தை உற்பத்தி செய்யத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

## கோரிக்கையை வலியுறுத்த!

ஆம்பூர் தோல் பதனிடும் தொழிலாளர் மறியல்?

ஆம்பூர், டிச. 31—

ஆம்பூரிலுள்ள ஏ. ஷாப்பு என்னும் ரபீக் அஹமத் அண்டு கோ டேனரி முதலாளி, மானேஜ்மெண்டார், அத்தொழிற்சாலையில பணிபுரியும் தோல் பதனிடும் தொழிலாளர்களின் நெடுநாளைய கோரிக்கையை இதுவரையிலும் கவனிக்காமல் இருந்து வருவதைக் கண்டிக்கவும் தங்கள் கோரிக்கைகளை வற்புறுத்தவுமாக, இங்குள்ள வடஆற்காடு மாவட்டத் தோல் பதனிடும் தொழிலாளர் யூனியனின் ஆம்பூர் கிளையினர், அத்தொழிற்சாலை முதலாளியின் வீடு, மண்டி, தோல் ஷாப் ஆகியவை முன்; நாளை முதல் மறியல் நடத்துவதென முடிவு செய்திருக்கின்றனராம்.

(ஈ-கி.)

## வாக்காளர்கள் கவனத்திற்கு!

'சென்னை மாநில சட்டசபை தொகுதிக்கான திருத்தியமைக்கப்பட்ட இறுதி வாக்காளர் பட்டியல்கள் தயாராகிவிட்டன. இந்தப் பட்டியல்கள் அடிப்படையில்தான் வரப்போகும் பொதுத் தேர்தல் நடைபெறும்' என்று அரசாங்கக் குறிப்பு ஒன்று கூறுகிறது.

இந்தப் பட்டியல்கள், தாசில்தார், வருமான வரி அதிகாரிகள் காரியாலயங்களில், பொது மக்களின் பார்வைக்கு வைக்கப்பட்டிருக்கிறது. அரசாங்கம் நிர்ணயித்துள்ள விலையை ரொக்கமாகக் கொடுத்து விருப்பமுள்ளவர்கள் வாங்கிக்கொள்ளலாம். இது பற்றிய முழு விவரங்களை தாலுகா, கலெக்டர் முதலிய காரியாலயங்களில் தெரிந்துகொள்ளலாம்.

பட்டியல்களில், சில வாக்காளர்கள் விஷயத்தில் தவறுகள் சில இடம் பெற்றிருக்கலாம்; அத்தகைய வாக்காளர்களைப், தங்கள்பற்றிய தவறுகளை திருத்தக்கோரி, தொகுதி தேர்தல் பதிவு அதிகாரிக்கு விண்ணப்பித்துக்கொள்ளலாம்.

வாக்காளர் விரும்பினால், தங்கள் பெயர்களை ஒரு இடத்திலிருந்து அதே தொகுதியில் வேறு இடத்திற்கு மாற்றக் கோரி தேர்தல் அதிகாரிக்கு விண்ணப்பித்துக் கொள்ளலாம்.

வாக்காளர் பட்டியலில் தங்களுடைய பெயர் விட்டுப்போயிருந்தால பெயரைச் சேர்த்துக்கொள்ளுமாறு தொகுதி தேர்தல் அதிகாரிக்கு விண்ணப்பித்துக் கொள்ளலாம்; ஆனால், தேர்தல் அறிவிப்பு வந்த பின்னர்—தேர்தல் முடிவதற்கு முன்னர் என்றால், மாநிலப் பிரதம தேர்தல் அதிகாரிக்குத்தான் விண்ணப்பித்துக்கொள்ள வேண்டும்.

இதற்கான விண்ணப்பத் தன்கள் தாலுகாக் காரியாலயங்களில் இலவசமாகக் கிடைக்கும். தொகுதித் தேர்தல் அதிகாரிக்கு விண்ணப்பிக்கும்போது ரூ. 1-க்கும், மாநிலத் தேர்தல் அதிகாரிக்கு விண்ணப்பிக்கும்போது ரூ. 5-க்கும் விண்ணப்பத்தில் தபால் தலைகள் ஒட்ட வேண்டும்.

## தென்னிந்திய நடிகர் சங்கம்

புத்தாண்டு நிர்வாகிகள் தேர்வு

சென்னை, டிச 31—

தென்னிந்திய நடிகர் சங்கத்தின் புத்தாண்டுத் தலைவராகக் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் அவர்களும், செயலாளர்களாகப் புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன், இலட்சிய நடிகர் எஸ். எஸ். இராசேந்திரன் ஆகியோரும் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கின்றனர்.

நேற்று முன்தினம் தென்னிந்திய நடிகர் சங்கத்தின் நிர்வாகிகள் தேர்தல் நடைபெற்றது.

அத்தேர்தலில் தோழர்கள் வி. நாகையா, கே. சுப்பிரமணியம், என். எஸ். நாராயணபிள்ளை, ஜி. கோவிந்தராசுலு ஆகியோர் துணைத் தலைவர்களாகவும், தோழர் எஸ். வி. சகஸ்ரநாமம் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மற்றும் தோழர்கள் டி. வி. நாராயணசாமி, எஸ். எஸ். இராசேந்திரன், எம். ஜி. சக்கரபாணி, டி. கே. பாலச்சந்திரன், எம். கே. முஸ்தபா, எம். என். கிருஷ்ணன், கே. ஆர். சீதாராமன், என். எம். முத்துக்கூத்தன், ஆர். எம். வீரப்பன், பி. எஸ். தட்சிணாமூர்த்தி, தோடி எம். கண்ணன், பூபதி கந்தராசன், டி. கே. பகவதி, சிவசண்முகம், பிரண்ட் கே. இராமசாமி, பி. டி. சம்பந்தம், கே. பி. தாயமணி, எம். எஸ். கருப்பையா, டி. கே. மாரியப்பா, தோழியர்கள் எஸ். டி. சுப்புலட்சுமி, சி. டி. இராசகாந்தம் ஆகிய 21 பேரும் செயற்குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

**************************************



## தி. மு. க. வில்லை (பாட்ஜ்)

தி. மு. கழகக் கொடி வட்ட வடிவில் (மேற்பாதி கருப்பு—கீழ்ப்பாதி சிவப்பு) பொறிக்கப்பட்டு, அந்த வட்டத்தைச் சுற்றி அமைந்துள்ள வெள்ளை வளையத்தில் மேலே 'தி. மு. க.' என்ற எழுத்துக்களும், கீழே 'வருக! வெற்றி தருக!' என்ற சொற்றொடரும் எழுதப்பட்டு, சட்டையில் குத்திக்கொள்வதற்கு ஏற்றவகையில் வில்லை (பாட்ஜ்) தலைமை நிலையத்தால் தயாரிக்கப்பட்டுள்ளது.

இந்த வில்லை சாதாரண நாட்களிலும், தேர்தல் காலத்திலும், கழகத் தோழர்களும், தேர்தல் பணியில் ஈடுபடும் தொண்டர்களும் அணிவதற்கு ஏற்றதாகும்.

### வில்லையின் விலை அணு 6.

விற்பனைக் கழிவு என்று கிடையாது. வெளியூர்க்கிளைகள்: 25 வில்லைகளுக்குக் குறையாமல் எத்தனை வில்லைகள் வேண்டுமோ, அவ்வளவுக்குரிய தொகையை முன்கூட்டியே தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைத்தால், தலைமை நிலையச் செலவில் அவை அனுப்பிவைக்கப்பெறும்.

'அறிவகம்' சென்னை 24—12—56 —தலைமைக் கழகம் (தி. மு. க.)

**************************************

## அம்பேத்கார் மறைவுக்கு அஞ்சலி

அனுதாபக் கூட்டங்கள்

கொழும்பு:

9—12—56ல், கொழும்பு அழகிரி மன்றத்தில் தோழர் எஸ். ஜே. மைக்கேல் தலைமையில் அனுதாபக் கூட்டம் நடைபெற்றது.

திருச்சி:

10—12—56 மாலை 6 மணிக்கு, திருச்சி வரகனேரி குழுமித் தெருவிலிருந்து மௌன ஊர்வலம் புறப்பட்டு இராம சபா மண்டபத்தை அடைந்ததும், திரு. எ. ஜி. சன்னாசி தலைமையில் நடைபெற்ற அனுதாபக் கூட்டத்தில் தோழர்கள் பலர் இரங்கலுரை நிகழ்த்தினர். பின்னர், கூடியிருந்தோர் அனைவரும் எழுந்து நின்று தங்கள் மரியாதையைத் தெரிவித்துக் கொண்டனர்.

நெடுமருதூர்:

9-12-56 பிற்பகல் 1 மணிக்கு, மாயூரம் தாலுகா நெடுமருதூர் வட்டார ஆதிதிராவிட மக்களடங்கிய ஊர்வலம் ஒன்று தோழர் என். எஸ். வீரையா தலைமையில் நடைபெற்று, நெடுமருதூர் அரச மரத் திடலை அடைந்தது. பின்னர், அவர் தலைமையில் நடைபெற்ற அனுதாபப் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் பலர் பேசினதுடன், அனுதாபத் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

பம்பாய் தி. மு. கழக அனுதாபம்

பம்பாய் தி. மு. கழக மத்தியக் குழு, டாக்டர் அம்பேத்கார் மறைவு குறித்துத் தனது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டுள்ளது.

ஆத்தூர் (சேலம்மாவட்டம்)

7—12—56 காலை 6 மணிக்கு, ஆத்தூர் நகர் வீரையன் வாலிபர் சங்கச் சார்பில் மௌன ஊர்வலம் நடைபெற்றது. பின்னர், அம்பேத்கார் மைதானத்தில் தோழர் சடையன் தலைமையில் நடைபெற்ற அனுதாபக் கூட்டத்தின்போது அம்பேத்கார் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும்வகையில் 5 நிமிட நேரம் மௌனம் மேற்கொள்ளப்பட்டது.

மேல்பட்டடை:

25—12—56 மாலை 6 மணிக்கு, சென்னை — செம்பியம் மேல்பட்டடை சங்கதாரம் கிளைவு முன்னேற்றக் கழகத்தில், திரு. கே. பி. சாமுண்டீசுவரன் எம். பி., தலைமையில் நடைபெற்ற அனுதாபக் கூட்டத்தில் திரு. எஸ். பக்கிரிசாமி எம். எல். ஏ., எம். பி., ஜி. உமாபதி, வி. பி. எஸ். மணியர், கனகாதன், என். நாராயணசாமி, மீனாட்சிசுந்தரம் ஆகியோர் பேசினபின், மேல்பட்டடையில் அம்பேத்கார் உருவச்சிலை அமைத்து, அப்பேட்டைக்கு அம்பேத்கார்நகர் எனப் பெயரிடுமாறு தீர்மானிக்கப்பட்டது.

இராசபாளையம்:

23—12—56 அன்று இராசபாளையம் தி. மு. கழகச் சமதர்மப் படிப்பகச் சார்பில், தோழர் மா. குருசாமி தலைமையில் நடைபெற்ற அனுதாபக்கூட்டத்தில், டாக்டர் அம்பேத்கார், இசைப்பெருப் புலவர் இராசரத்தினம் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து தோழர்கள் எம். எஸ். புரட்சிமணி, டி. கே. கே. சாமி, இ. பரமசிவன், அ. பரமானந்தம், க. கார்மேகம், இராசசேகரன், ச. பாலகிருஷ்ணன் ஆகியோர் பேசினர்.

பட்டாபிராம்:

26—12—56 மாலை 4 மணிக்கு, பட்டாபிராம் இரயில்வே நிலையத்தில், 206 வி. ஓ டி. பட்டாபிராம் தொழிலாளர் சார்பில் திரு கே. பி. சாமுண்டீசுவரன் எம். பி., தலைமையில் அனுதாபக் கூட்டம் நடைபெற்று, இரண்டு நிமிடம் மௌனமாக இருந்து அனுதாபம் தெரிவித்துத் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. தோழர்கள் ஆர். நடராசன், கே. இராமானுசதாஸ், செயராமன் ஆகியோர் பேசினர்.

பம்பாய்—தாராவி

21—12—56-ல், பம்பாய்—தாராவியில், தாராவி தாலுகா தாழ்த்தப்பட்டோர் சம்மேளனச் சார்பில், தோழர் வை. சோமு தலைமையில் நடைபெற்ற அனுதாபக் கூட்டத்தில் தோழர்கள் டாக்டர் எஸ் எம். செல்லையா, மு. நா. ஆறுமுகம், க. அர்த்தநாரீசுவரன், மு. அருணாசலம் ஆகியோர் இரங்கலுரை நிகழ்த்தினர். இறுதியில் அனுதாபத் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

### குடந்தை ரசிகர் சங்க வேண்டுகோள்

குடந்தை, டிச. 29—

திரும்பத்திரும்ப பழைய படங்கள் காட்டப்படும்போது நுழைவுக் கட்டணங்களைக் குறைக்குமாறு திரைப்படக் கொட்டகையாளர்களைக் கேட்டுக்கொண்டு, கடந்த 28-ந் தேதியன்று குடந்தையில் நடைபெற்ற நகர சினிமா ரசிகர்கள் சங்க நிர்வாகக் கூட்டத்தில் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

திரு. முத்துக்குமார் அவர்கள் தலைமையில் நடைபெற்ற அக்கூட்டத்தில் தமிழக சினிமா நடிகர்களுக்கு ஆண்டுதோறும் விருதுகள் வழங்குமாறு சென்னை சர்க்காரைக் கேட்டுக்கொண்டும், நடிகை தோழியர் பானுமதிக்கு, ஜனாதிபதி விருது வழங்கினமை குறித்துப் பாராட்டுதல் தெரிவித்தும், இசைப் பெரும் புலவர் இராசரத்தினம், டைரக்டர் கே. இராம்நாத் ஆகியோர் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

(ஈ-கி.)

# 'ரஷ்ய இராணுவம் உலவுவது ஹங்கேரிய தேசீய கௌரவத்திற்கு ஊறு தேடுவதாகும்'

## கம்யூனிஸ்டு இதழுக்கு 'ஞானோதயம்'

மக்கள் கிளர்ச்சிக்குப் பணிகிறது ரஷ்யா

புதாபெஸ்ட், சன 1—

"ஹங்கேரிக்குள் ரஷ்யாவின் செஞ்சேனை உலவுவது, ஹங்கேரி போன்ற ஒரு சுதந்திர நாட்டு மக்களின் தேசிய கௌரவத்திற்கு ஊறுதேடுவதாயுள்ளது"

என்று ஹங்கேரி-கம்யூனிஸ்டு கட்சியின் 'நெப் ஜபதாக்' என்ற பத்திரிகை எழுதியுள்ளதாம்.

மாஸ்கோ எஜமானர்களின் தாசானுதாசர்களாயிருக்கச் சம்மதித்துக்கிடந்த ஹங்கேரி கம்யூனிஸ்டுகளுக்குத் தேசியக் கௌரவம் பற்றிப் புதிதாக ஞானோதயம் பிறந்துவிட்டது என்று பிரசாரஞ்செய்யும் நோக்குடன், இந்த இதழ் இவ்வாறு எழுதியிருப்பதாகக் கூறப்படுகிறது.

### ரஷ்யா பணிகிறது!

ஹங்கேரி மக்களின் இடைவிடாத சுதந்திரக் கிளர்ச்சியினை தனது எத்தனைதான் வலிமை மிகுந்த இராணுவத்தினாலும் அடக்கிவிட முடியாது என்பதை உணர்ந்து விட்டதுபோலத் தோற்றமளிக்கும் வகையில்—ஹங்கேரியிலும், குறிப்பாகத் தலைநகரான புதாபெஸ்டிலும் ஓயாது ரோந்து வந்துகொண்டிருந்த இராட்சதத்தனமான ரஷ்ய டாங்கிகளும் துருப்புகளும் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து வருகின்றனவாம்!

### புத்தாண்டுத் தொல்லைகள்

'புத்தாண்டுத் தொல்லைகளும் புத்தாண்டு நம்பிக்கைகளும்' என்று தலைப்பிட்டு அந்த இதழ் எழுதியுள்ள தலையங்கத்தில் காணப்படுபவை என்று கூறப்படுவதாவது:—

"புதுவருடம், ஹங்கேரிக்கு மேலும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் பற்றாக்குறையையும் கொண்டுவரவிருக்கிறது. பணவீக்கத்தையும் எரிபொருள் பற்றாக்குறையையும் கொண்டு வரவிருக்கிறது.

### உதவுவீர்

"இடிந்துபோன வீடுகளையும், தொழிற்சாலைகளையும் மீண்டும் எழுப்புவதற்காக அன்னியர் கடன் உதவவேண்டும்—குறிப்பாக மேலை நாட்டவர் பெருமளவு உதவவேண்டும். நாட்டின் சிதைக்கப்பட்ட பொருளாதாரம் அப்போதுதான் மீண்டும் சீர்பெற முடியும்.

### கூலி உயர்வு இல்லை

"நாம் பல தொழிற்சாலைகளை மூடவேண்டிவரும்; நாம் சிக்கனமாகவே வாழவேண்டிவரும். இராணுவத்திற்கும் சர்க்கார் நிர்வாகத்திற்கும் அதிகம் செலவிடமுடியாது.

"தேசிய எழுச்சியின்போது தோன்றிய நிலைமைகளின் விளைவாகப் புத்தாண்டில், எவருக்கும் கூலி உயர்வு தருவதற்கில்லை; மக்களின் வாழ்க்கைத் தரம் இந்த ஆண்டில் உயர்த்தப்படமுடியாது."

### ஒடுக்கப்பட்டது

கம்யூனிஸ்டு கட்சிப் பத்திரிகை இப்படி எழுதிக்கொண்டிருக்கும்போதே, ஹங்கேரி பாதுகாப்பு மந்திரி பெரென்ஸ் மியூனிச் என்பார், 'ரஷ்ய இராணுவத்தின் துணைகொண்டு ஹங்கேரி எழுச்சியை ஒடுக்கிவிட்டோம்; எதிர்ப்புரட்சிக்காரர்களில் அங்குமிங்குமாகச் சிலர் மட்டுமே காடுகளிலும் நெடுந்தொலைவுகளிலும் மறைந்துகொண்டிருக்கின்றனர்' என்று கூறியுள்ளாராம்!

### சோதிக்கப்பட்ட தேச பக்தர்கள்

'சோதிக்கப்பட்ட தேச பக்தர்களைக்கொண்ட புதிய போலீஸ் படையும், இராணுவமும் அமைக்கப்படும்' என்றும் அவர் கூறியிருக்கிறார்!

## காளிதேவிக்கு தலை காணிக்கை!

ஜயப்பூர், சன. 1—

காரர்மாலா எனும் கிராமத்திலிருக்கும் காளி கோவில் பூசாரி, இன்று காலை கோவில் கதவைத் திறந்ததும் அங்கே ஒரு மனிதத் தலை, ஆட்டுத் தலை ஒன்றோடு சேர்த்து காளிதேவிக்குக் 'காணிக்கை'யாக, பெரிய தட்டு ஒன்றில் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டாராம்! இந்தக் கோரக் காட்சியைக் கண்டு சகிக்கமுடியாமல் அவர் மயங்கிக் கீழே விழுந்தாராம்!

போலீசாருக்கு இந்தத் தகவல் கிடைத்ததும் அவர்கள் 'காணிக்கை' தந்த பக்திமானைத் தேடுவதில் தீவிரமாக ஈடுபட்டிருக்கின்றனராம்!

## விளாப்பாக்கம் ஊராண்மை கழகத் தேர்தல்

### கழகத் தோழர்கள் போட்டியின்றி வெற்றி பெற்றனர்

விளாப்பாக்கம், ஜன. 1—

26—12—56ல் நடைபெற்ற வ. ஆ. மாவட்டம் விளாப்பாக்கம் ஊராண்மைக் கழக உறுப்பினர் தேர்தலில், தோழர் தி. கு. நாதன் உட்பட 7 தோழர்களும், தோழர் அ. ர. சு. வெங்கடாசலம் தலைவராகவும் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரும், மற்ற உறுப்பினர்களும் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டனர்.

விளாப்பாக்கம் தி. மு. கழகக் கிளையின் சார்பில் அவர்களுக்கு வரவேற்பும் அளிக்கப்பட்டது.

(ந. - கி.)

## அரிசன கிறித்துவர்கள் பௌத்தர்களாயினர்

ஆமத்நகர், டிச. 31—

மகர் அரிசன வகுப்பைச் சேர்ந்த 15,000 பேர் இன்று பௌத்த மதத்தில் சேர்ந்தனர். அவர்களில் 1,000 பேர் கிறித்துவ மதத்தில் இருந்தவர்கள்.

## மலேயாவில் இந்துத் திருமணப் பதிவு மசோதா

### விரைவில் தாக்கலாகும்?

கோலாலம்பூர், டிச. 29—

மலேயாவில் இந்துத் திருமணங்களைப் பதிவு செய்துகொள்ளவும், விவாகரத்து போன்ற மற்ற விவகாரங்களையும் கவனிக்கும்வகையில், மலேயா சட்டசபையில் விரைவில் ஒரு மசோதா தாக்கல் செய்யப்படும் என்று தெரிகிறது.

அண்மையில் இங்கு நடைபெற்ற பலதிறப்பட்ட இந்து நிறுவனங்களின் பிரதிநிதிகளடங்கிய கூட்டம் ஒன்றில் அந்த மசோதாவின் நகல் ஒன்று விவாதிக்கப்பட்டது என்றும் தெரிகிறது.

## 'ஜனதா' எக்ஸ்பிரஸ் தடம் புரண்டது

ஹௌராவிலிருந்து டில்லிக்கு வந்துகொண்டிருந்த ஜனதா எக்ஸ்பிரசின் எஞ்சினும் 4 பெட்டிகளும் டில்லியிலிருந்து 140 மைல் தூரத்தில் ஊட்ராஸ் என்னும் இடத்திற்கு அருகில் நேற்று காலை தடம் புரண்டதால் 7-பேருக்குக் காயம் ஏற்பட்டதாகக் கூறப்பட்டிருக்கிறது.

## விழா விபத்துக்களில் 1,000 பேர் பலி!

நியூயார்க், சன. 1—

கிறிஸ்துமஸ் விடுமுறை தினத்தன்றும், புத்தாண்டு தினத்தன்றும், இந்த ஆண்டில் 1,000-க்கும் அதிகமான அமெரிக்கர்கள் கார் விபத்துக்களில் கொல்லப்பட்டதாகச் செய்தி ஒன்று தரப்பட்டிருக்கிறது.

## சென்னையில் திராவிட மாதர்கள் தி. மு. க. தேர்தல் நிதி

அளிப்பு விழா

★

9—1—57 மாலை 6-மணிக்கு, சென்னை — திருவல்லிக்கேணி கடற்கரையில், திராவிட மாதர்கள் சார்பில் தி. மு. கழகத் தேர்தல் நிதி அளிப்புவிழா, தோழியர் வெ. குப்பம்மாள் தலைமையில நடைபெறும்.

அண்ணா, பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன், துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன், தோழியர் இராசம் ஆகியோர் பேசுவர்.

இக்கூட்டத்தில் சென்னை பஸ் போக்குவரத்துத் தொழிலாளர்கள் சார்பிலும் தேர்தல் நிதி அளிக்கப்படும்.


## பார்க்பேர் பொருட்காட்சி: 56-57

சென்னை S. I. A. A. திடலில் : 3-1-57 மாலை 6-30 மணிக்கு

திறந்தவெளி சகுந்தலா கலை அரங்கில்

டணால் கே. ஏ. தங்கவேலு & குழுவினர் அளிக்கும்

'மிஸ்டர் ராஜா' தமிழ் நாடகம்

நுழைவு: ரூ. 3, 2, 1, அணா 8. திறந்தவெளி இலவசம்

சென்னை கவர்னர் உயர்திரு ஏ. ஜே. ஜான் அவர்கள் பாராட்டிய உஷா வீணை வாத்தியம், சர்க்கஸ், தந்திரக்காட்சி, ஓவியக்கலை, பம்பாய் நடனம், பொம்மலாட்டம், ராட்டினம், மயில், தஞ்சாவூர் குதிரைகள் நாட்டியம், மறுபிறவி மகாத்மா காந்தி தேகப் பயிற்சி சைக்கிள் விளையாட்டு மற்றும் பல,—பொருட்காட்சி பகல் 2 மணி முதல் இரவு 10 மணிவரை. பிரவேசக் கட்டணம் 0—5—0

எம். எஸ். மோகன்—காண்டிராக்டர்


## கைத்தறிக்கு விற்பனை வரி

## எதிர்ப்பு தெரிவித்து 10,000 துணிக் கடைகள் மூடப்பட்டன

மக்கள் சபை உறுப்பினர் உட்பட பலர் கைது

கல்கத்தா, சன. 1—

துணிக்கடைகள் 'அர்த்தால்' அனுஷ்டிக்கவேண்டும் எனக் கோரி நிர்ப்பந்தித்ததாக, ஒரு மக்கள்சபை உறுப்பினர் உட்பட 14 பேர்கள் இன்று இங்கு கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

### 26-ந் தேதி முதல்

சுமார் ஒரு இலட்சம் பேருக்கு வேலை தருகிற 10,000 துணிக்கடைகள் கடந்த 26-ந் தேதி முதல் 'அர்த்தால்' அனுஷ்டித்துவருகின்றன.

### கோரிக்கை

கைத்தறித் துணிகளுக்கு விற்பனை வரி விதிப்பை இரத்து செய்ய வேண்டும் — துணி விற்பனைக்கு லைசென்ஸ் வழங்கும் முறையை அடியோடு ஒழிக்கவேண்டும் என்பனபோன்ற கோரிக்கைகளுக்காகவே துணிக்கடையினர், கடைகளை மூடி 'அர்த்தால்' நடத்துகின்றனராம்.

நேற்று சில கடைக்காரர்கள் கடைகளைத் திறந்துவைத்து வியாபாரம் நடத்தினர் என்றும், அவர்களைக் கடையை மூடுமாறு கோரியதற்காகவே மேற்சொன்ன மக்கள் சபை உறுப்பினர் கைது செய்யப்பட்டதாகவும் கூறப்படுகிறது.

## தி.மு.கழகப் பொதுக்குழு முடிவுகள்

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

### 3. உறுப்பினர் கட்டணத் தொகை

முதன் முறையாகச் சேர்க்கப்பட்டுத் தலைமைக் கழகத்திற்கு அனுப்பிவைக்கப்பட்ட உறுப்பினர் கட்டணத் தொகை முழுவதையும் தலைமைக் கழகத்தின் ஆக்கப் பணிகளுக்காகப் பயன்படுத்துவது என்றும், இரண்டாவது முறையாகத் தற்போது சேர்க்கப்பட்டுத் தலைமைக் கழகத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டுவரும் உறுப்பினர்களின் கட்டணத் தொகையிலுள்ள மாவட்டக் கழகங்களின் பங்குகளை அந்தந்த மாவட்டங்களின் சார்பாக வழங்கப்பட்ட தேர்தல் நிதியாகப் பயன்படுத்துவதென்றும் இப்பொதுக்குழு முடிவு செய்கிறது.

—மு மொ. : என் எஸ் இளங்கோ
—வ மொ. : முல்லை - சத்தி

### 4. தேர்தல் அறிக்கை

திராவிட முன்னேற்றக் கழகத் தேர்தல் அறிக்கையைத் (தேர்தல் விஞ்ஞாபனம்) தயாரிக்கச் செயற்குழுவால், தோழர் என். வி. நடராசன் அவர்களைத் தலைவராகவும், தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத், கே. ஏ. மதியழகன், மு. கருணாநிதி, ஏ. கோவிந்தசாமி, எம். பி. சுப்பிரமணியம், தோழியர் சத்தியவாணிமுத்து ஆகியோரை உறுப்பினர்களாகவும் கொண்டு அமைக்கப்பட்ட 'தேர்தல் அறிக்கைக் குழு'வைத் தனது அறிக்கையைத் தயாரிக்கச் செய்து, மத்திய செயற்குழுவின் ஒப்புதலுடன், அதனை 1957 சனவரி 15-ஆம் நாளுக்குள் வெளியிடுமாறு இப்பொதுக்குழு பொதுச் செயலாளரைக் கேட்டுக் கொள்கிறது.

—மு மொ : ஆர் எஸ். பாண்டியன்
—வ. மொ : காஞ்சி மணிமொழியார்

### 5. தேர்வுக் குழு

அண்மையில் நடைபெறப் போகும் பொதுத் தேர்தலில பாராளுமன்றத்திற்கும், சட்டசபைக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் நிறுத்தி வைப்பதற்கேற்ற அபேட்சகர்களைத் தேர்ந்தெடுப்பதற்குக் கீழ்க்கண்ட ஏழுபேர்கள் கொண்ட தேர்வுக்குழு (பார்லிமெண்டரி போர்டு) ஒன்றை நியமிப்பதோடு, அந்தக்குழு, தான் தயாரிக்கும் அபேட்சகர்களின் பட்டியலை அவ்வப்போது வெளியிட வேண்டும் என்றும் இப்பொதுக்குழு முடிவு செய்கிறது.

தேர்வுக்குழு உறுப்பினர்கள் :—

1. பொதுச்செயலாளர் (தலைவர்)
2. என். வி. நடராசன்
3. ஈ. வெ. கி. சம்பத்
4. மு. கருணாநிதி
5. கே. ஏ. மதியழகன்
6. ஏ. வி. பி. ஆசைத்தம்பி
7. எஸ். முத்து

—மு. மொ : அண்ணா
—வ. மொ : சத்தியவாணிமுத்து

### 6. தி.மு.க. அபேட்சகர்கள் நிறுத்தப்படாத தொகுதிகள்பற்றி

தி. மு. கழக அபேட்சகர்கள் நிறுத்தப்படாத தொகுதிகளில், கழகம் எந்தவிதமான தொடர்பு - துணை - ஆதரவு - ஒத்துழைப்பு தருவது என்பது பற்றி, ஆங்காங்குள்ள சூழ்நிலையை அறிந்து முடிவெடுத்து அறிவிக்கும் பொறுப்பினைப் பொதுச்செயலாளருக்கு இப்பொதுக் குழு அளிக்கிறது.

—மு. மொ. : எஸ் முத்து
—வ. மொ. : அம்பில் தருமலிங்கம்

### 7. தேர்தல் சிறப்பு மாநில மாநாடு

திராவிட முன்னேற்றக் கழக அபேட்சகர்களைப் பொதுமக்களுக்கு அறிமுகம் செய்யவும், வாக்காளர்களுக்கு மேலும் வேண்டுகோள விடுக்கவும் 1957 பிப்ரவரி 10-ம் நாள் ஞாயிறன்று கோவையில் 'தி. மு. கழகத் தேர்தல் சிறப்பு மாநில மாநாடு' நடத்துவதென்று இப்போதுக் குழு தீர்மானிக்கிறது.

—மு. மொ : மு கருணாநிதி
—வ. மொ. : கி மனோகரன்

[இதர தீர்மானங்கள் அடுத்து வெளிவரும்]

## தொழிற் சங்கப் போட்டியின் விளைவு

நான்கு தொழிலாளர்கள் மருத்துவ மனையில்

ஒருவர் நிலை கவலைக்கிடம்

குன்னூர், டிச 30—

தோட்டத் தொழிலாளரை அணைத்துக் கொண்டுள்ள இரு சங்கங்களிடையே ஏற்பட்ட போட்டிமனப்பான்மை நான்கு தோட்டத் தொழிலாளிகளை மருத்துவ மனைக்கு அனுப்பிவைத்துள்ளது.

கடந்த டிசம்பர் 23-ந் தேதி மேற்கொண்ட முடிவுப்படி, 29-ந் தேதியன்று ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கின்றனர், நீலகிரி மாவட்ட தோட்டத் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்தவர்கள்!

சிலர், இந்த முடிவுக்கு விரோதமாக வேலைக்குச் சென்றிருக்கின்றனர்.

நீலமலை தோட்டத் தொழிலாளர் சங்கம் என்ற மற்றொரு சங்கத்தைச் சேர்ந்தவர்கள் வழக்கம்போல வேலைக்குச் சென்றிருக்கின்றனர்.

இந்த நிலையினால், ஆத்திரப்பட்ட நிலையில் ஒரு சங்கத்தைச் சேர்ந்தவர் மற்றச் சங்கத்தைச் சேர்ந்தவர்களைத் தாக்குகிற இழி செயலில் ஈடுபட்டிருக்கின்றனர்; விளைவாக, புரூமவுண்டன் கம்பெனியைச் சேர்ந்த கிளென்டேல் எஸ்டேட்டில் பணிபுரியும் தொழிலாளர் நால்வர் கடுமையாகத் தாக்கப்பட்டிருக்கின்றனர்.

ஒருவர் பலத்த கத்திக் குத்துக்கு ஆளாகி அபாயகரமான நிலையிலிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

நிலைமை இன்னும் நெருக்கடியாகவே இருக்கிறதாம்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப் பெறுகிறது. ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

